

உ

சிவமயம்

அண்ணாமலையார் துணை

திருவண்ணாமலை

ஸ்ரீஅபீதகுசாம்பாஸமேத அருணாசலேசுவரசுவாமி

ஆலய ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

# மஹா கும்பாபிஷேக பத்திரிகை





சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை

1944



விநாயகர்



சுப்பிரமணியர்

௮/௰



அருணாசலேசுவரர்

91/1



ஸ்ரீ அபீதகுசாம்பாள்



அருணகிரி

சிவமயம்

அண்ணாமலையார் துணை





திருவண்ணாமலை

ஸ்ரீஅபீதகுசாம்பாஸமேத அருணசலேசுவரசுவாமி

ஆலய ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

# மஹா கும்பாபிஷேக பத்திரிகை

‖ 𑌶𑍋𑌣𑌾𑌚𑌲𑌶𑌿𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 ‖

𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌨𑌲𑌨𑌾𑌯𑌵𑌾𑌸𑍍𑌤𑍁 𑌦𑌰𑍍𑌪𑌹𑌂𑌕𑌾𑌰𑌦𑌗𑍍𑌧𑌜𑍍𑌵𑌲
𑌜𑍍𑌵𑌾𑌲𑌾𑌮𑌾𑌲𑌾𑌯𑌮𑌾𑌨𑌾𑌕𑍃𑌤𑌿𑌯𑌮𑌂 𑌵𑌪𑍁𑌷𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌬𑌿𑌂𑌬𑌾 -
[𑌨𑌨𑌂।

𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌽𑌪𑍀𑌤𑌕𑍁𑌚𑌾𑌮𑍍𑌬𑌯𑌾𑌸𑌹𑌲𑌸𑌦𑍍𑌵𑌾𑌮𑌾𑌙𑍍𑌗𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌯𑍀 -
𑌵𑌪𑍁𑌜𑌾𑌤𑌦𑍍𑌵𑌾𑌰 𑌕𑌾𑌰𑌿𑌤𑌾𑌯𑌚𑍇𑌷𑍍𑌟𑌂 𑌶𑍋𑌣𑌾𑌚𑌲𑍇𑌶𑌂
𑌭𑌜𑍇 ‖ (௧)

[illegible]
[illegible]
[illegible] 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌫𑌣𑌿𑌰𑌾𑌜𑌂 𑌶𑌶𑌿𑌕𑌲𑌾𑌂
[illegible] 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇॥ (௨)

॥ 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 ॥

[illegible]
[illegible]
[illegible] ॥ (௩)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தேவாரம்

### பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

உண்ணமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம்முழ வதிரு
மண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே. (க)

### பண் - தக்கேசி

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கண்
மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் னிரையோடு
மாமாம் பிணைவந் தணையுஞ் சார லண்ணா மலையாரே. (உ)

## திருநாவுக்கரசுநாயனர் தேவாரம்

### திருநேரிசை

ஓதிமா மலர்க ளேவி யுமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கு மெண்டோட் சுடர்மழுப் படையி னானே

யாதியே யமரர் கோவே யணியணு மலையு ளானே
நீதியா னின்னை யல்லா னினையுமா நினைவி லேனே. (ரு)

திருக்குறுந்தொகை

வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணு மலையனை
யிட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையு
மட்ட னையடி யேன்மறந் துய்வனே. (௪)

சுந்தரமூர்த்திநாயனுர் தேவாரம்

பண் - பழம்பஞ்சுரம்

தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்று ரறியா நெறியானே
யானைக் காவி லரனே பரனே யண்ணு மலையானே
யூனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே. (ரு)

திருவாசகம்

திருவம்மானை

விண்ணுளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணுளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றுனைத்
தண்ணுர் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணுளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணுர் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
வண்ணு மலையானைப் பாடுதுங்கா ணம்மானுய். (சு)

ஸ்தலமகிமை

இரவிகள் சந்திரர் வயிரவர் விஞ்சைய ரிமையவ ரெண்டிசையோ
ருரக ரருந்தவர் முனிவரர் பங்கய ருவண நெடுங்கொடியோர்
பரவி நெருங்கலி னுலக நிறைந்தவர் பணியு மிடங்கிடையா
தரகர வென்பது கடலின் முழங்கிய தருணை வளம்பதியே. (எ)

## அண்ணுமலையார் துதி

ஒருமானைக் கரத்தினில்வைத் தொருமானைச்
சிரத்தினில்வைத் துலக மேழுந்
தருமானை யிடத்தினில்வைத் தருள்வானைப்
பவளநெடுஞ் சயிலம் போல
வருமானை முகத்தானை யளித்தானைப்
பொருமானை மகிழ வேறும்
பெருமானை யருணகிரிப் பெம்மானை
யடிபணிந்து பிறவி தீர்ப்பாம். (அ)

## உண்ணுமுலையம்மையார் துதி

காரொழுகுங் குழலாளைக் கருணைவழிந்
தொழுகுமிரு கடைக்கண் ணுளை
மூரவிள நிலவொழுகப் புழுகொழுக
வழகொழுகு முகத்தி ளுளை
வாரொழுகுந் தனத்தாளை வடிவொழுகித்
தெரியாத மருங்கு லாளைச்
சீரொழுகும் பதத்தாளை யருணையுண்ணு
முலையாளைச் சிந்தை சேர்ப்பாம். (கூ)

## கும்பாபிஷேக பலன்

அம்ஶுமான் ஆகம சுலோக மொழிபெயர்ப்பு

### அகவற்பா

உமையொரு பாகத் தமல ளுகிய
சிவபிரா னுக்குச் சிறப்புறச் செய்யுங்
கும்பாபி டேகபலன் கூறுதுங் கேண்மோ
ஆக மங்க ளருளிய வாறே
கும்பாபி டேகங் குயிற்றிய மனிதர்
பாப மனைத்தையும் பற்றற விடுவர்
வீடு விரும்பினோர் வீடுபெறு கின்றூர்

நாடு விரும்பினோர் நாடுபெறு கின்றார்
புதல்வரை விரும்பினோர் புதல்வரைப் பெறுவர்
சிதைவின்மை விரும்பினோர் சிதைவின்மை பெறுவர்
பொருளை விரும்பினோர் பொருள்பெறு கின்றார்
அருளை விரும்பினோ ரருள்பெறு கின்றார்
ஞானம் விரும்பினோர் ஞானம் பெறுவர்
மோனம் விரும்பினோர் மோனம் பெறுவர்
அரோகம் விரும்பினோ ரரோகம் பெறுவர்
ஆயுளை விரும்பினோ ராயுளைப் பெறுவர்
இம்மையின் மகப்பே றிருஞ்செல்வ முடையராய்த்
தேகாந் தத்திற் சிவசா யுச்சியம்
பெறுவ ராதலிற் பெரிதா முயற்சியாற்
றேவ தேவன் சிவபெரு மானுக்
கட்டபந் தனஞ்செய் தரிய பெரிய
கும்பாபி டேகங் குயிற்றுக வென்பவே. (௧0)

## கிருத்திகா தீப மகிமை

கார்த்திகைக்குக் கார்த்திகைநா ளொருசோதி
மலைநுனியிற் காட்டா நிற்போம்
வாய்த்தவந்தச் சுடர்காணிற் பசிபிணியில்
லாதுலகின் மன்னி வாழ்வார்
பார்த்திவர்க்கு மருந்தவர்க்கு மிடையூறு
தவிருமிது பணிந்தோர் கண்டோர்
கோத்திரத்தி லிருபத்தோர் தலைமுறைக்கு
முத்திவரங் கொடுப்போ மென்றார். (௧௧)

## அன்னதான மகிமை

உத்தம தலத்திற் கோடி யருந்தவர்க் குதவு மன்ன
மித்தமாங் காசி மீதோ ரவிழ்ப்பலன் றனக்கு நேரா
தத்தலத் தனந்த கோடி யருந்தவர்க் குதவு மன்னஞ்
சத்திய வருணை நாட்டி லவிழ்ப்பலன் றனக்கொவ் வாதே.

ஸ்ரீமதகண்டாகார நித்த வியாபக ஸச்சிதானந்த ஸ்வரூப சுத்த ஷாட்குண்ய பரிபூரண பரமபதியாகிய சிவ பெருமான் தமது தர்மபத்தினியாரும், லோகமாதாவுமாகிய பராசக்தியாரோ டியைந்து ஸ்ரீ சாம்பமூர்த்தியாய், ஆன்ம கோடிகள் அதிருசியராகிய தம்மைத் திருசியராகக் கண்டு எளிதிலுபாசித்துப் போகமோக்ஷ வின்பங்களைப் பெற்றுய்ய வேண்டிப் பூலோகத்தில் எண்ணில்லாத புண்ணிய ஸ்தலங் களை வைத்துப் பரிவார தேவதைகள் சூழ ஸ்கந்த கணேசர் கள் ஸஹிதம் அப்பராசக்தியாரோடு கோவில் கொண்டு கொலுவீற்றிருந்தருளுவர்.

அவ் வெண்ணில்லாத புண்ணிய ஸ்தலங்களுள்ளே சிறப்புவகையால் நோக்குமிடத்து உத்தம ஸ்தலங்கள் அறுபத்தெட்டு ; அவற்றுள்ளும் சிறப்புவகையால் நோக்கு மிடத்து உத்தமோத்தம ஸ்தலங்கள் நான்கு. அவை திருவாரூர், சிதம்பரம், காசி, திருவண்ணுமலை என்பனவாம். இவற்றுள்ளும் சிறப்பு வகையால் நோக்குமிடத்து முந்திய மூன்றும் முயன்று முத்திபெற வேண்டிய ஸ்தலங்களாய் நிற்ப, எங்கிருந்தும் எப்படியிருந்தும் எவர்களும் எம் முயற்சியும் செய்யவேண்டாது தன்னை நினைத்த மாத்திரத் திற்றனே அந்நினைத்தவர்களுக்கு முத்தியளிப்பது திரு வண்ணுமலையாதலால் எத்தலங்களுள்ளும் அத்தியந்த உத்த மோத்தம சிவஸ்தலம் திருவண்ணுமலையென்பது ஸர்வலோக ஸர்வ சாஸ்திரப் பிரசித்தமாம்.

சிவபெருமான், பிரம்ம விஷ்ணுக்கள் அகங்காரத்தால் அடிமுடி தேடியுங் காணுது திகைத்து நிற்ப, தாம் அகண்ட விலாச அதீத ஜோதிப் பிழம்பாய் நின்று தமது ஸர்வோத் கர்ஷத்தை அநுபவத்தில் விளக்கி நின்ற துர்லப அவசரம் இத்திருவண்ணுமலையாம்.

சிவபெருமான், தம்மை மறந்து அகங்கரித்த பிரம்ம விஷ்ணுக்களது அபராதத்தை அவர்களது முக்கரண வழி

பாட்டுக்குத் திருவுள மிரங்கி க்ஷமித்து அவர்களுக்குத் தமது யதார்த்த ஸ்வரூப சுத்த ஜோதி தரிசனங் காட்டித் தமது ஸர்வாநுக்கிரககரத்வத்தை அநுபவத்தில் விளக்கி நின்ற சுலப அவசரம் இத்திருவண்ணுமலையாம்.

சிவபெருமான் மற்றைத் தலங்களிற் போலாது எவர் கண்ணுக்கும் எளிதிற் புலப்படும்படி தமது வடிவம் மலையே யாகக்கொண்டு அதிப்பிரசித்த ஸாந்நித்தியம் பெற்று விளங் கும் கிருபாவசரம் இத்திருவண்ணுமலையாம்.

சிவபெருமான், ஜாதி, பிறப்பு, சமயம், ஆசாரம், ஞானம் என்னும் இவற்ருல் உயர்ந்தோரும் தாழ்ந்தோரு மாகிய ஜீவர்களெல்லாம் தம்மைத் தடையின்றித் தூரத்தி லும் சமீபத்திலும் ஏகாகாரமாகத் தரிசிக்கும்படி தமது ஸ்தானம் வெளியாகக்கொண்டு விளங்கும் ஸர்வ ஸமரசாவ சரம் இத்திருவண்ணுமலையாம்.

இங்கே பர்வதமே லிங்காகாரம். சிவலிங்கமாகிய இப் பர்வதமே கிருதயுகத்தில் அக்கினி மலையாயும், திரேதாயுகத் தில் மாணிக்க மலையாயும், துவாபர யுகத்தில் பொன்மலையா யும், கலியுகத்திற் கன்மலையாயும் திருவுருக்காட்டி நிற்கும்.

இதற்குத் தேஜோ நகரம், கௌரி நகரம், சிவலோகம், வாயு நகரம், முத்தி நகரம், ஞான நகரம், ஸ்தலேஶ்வரம், சுத்த நகரம், தக்ஷிண கைலாசம், சோணுசலம் முதலிய வாகப் பல நாமங்களுண்டு. ஸாக்ஷாத் கைலாசம் சிவபெரு மானுக்கு ஸ்தான மாத்திரமாய் ஒரு பிரகாரமாய் • விளங் கும்; சிவபெருமான் அதற்கு ஸ்தானியாகிய அதிபதியாவர். இத்திருவண்ணுமலையோ ஸ்தானமாகிய மலையுந் தானுய் ஸ்தானியாய் அதிபதியாகிய சிவமுந் தானுய் இரண்டு பிர காரமாயும் விளங்கும். இக்காரணத்தால் இதனையும் கை லாசத்தையும் சீர் தூக்கி நோக்கின், அக்கைலாசமும் கொண்டாடும் இத்திருவண்ணுமலையினது அதுலமகிமை

வெளிப்படையாகத் தோன்றும். இத்திருவண்ணுமலே ஊழியினும் அழியாது, பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலராய்ப் போதார் புனேமுடியும் எல்லாப் பொருண் முடிவேயாய் நின்று விளங்கும் சுத்த சிவமேயாம். இங்கே மூன்று யோசனே தூரம் பார்த்தவிடமெல்லாம் சிவலிங்கங்களாய் உண்மையன்பர்க்கு நக்ஷத்திரங்கள்போல விளங்கித் தோன்றும்.

இத்திருவண்ணுமலேயைப் பிராகாரத்தினின்று நோக்குவார்க்கு அது ஒவ்வொரு பாகத்திலே பஞ்ச மூர்த்தமாகவும், விநாயகர், ஸுப்பிரமணியர், அம்பிகை, அண்ணுமலேயாரென்னும் நான்கு மூர்த்தமாகவும், பார்வதி, பரமேசுவரர், ஸ்கந்தர் என்னும் திரிமூர்த்தமாகவும், சுவாமி அம்பாள் என்னும் இரண்டு மூர்த்தமாகவும், ஏக மூர்த்தமாகவும், இன்னும் பற்பல அற்புதமாகவுந் தோன்றும்.

இங்கே அம்பிகை, கணேசர், ஸ்கந்தர், வயிரவர், பிரம்மா, விஷ்ணு, இலக்குமி, ஸரஸ்வதி, ஸூரியன், சந்திரன், ஸப்த கன்னிகைகள், அஷ்ட வசுக்கள் முதலியோர் செய்தனவும், முழுகியனவுமாய், அவரவர் பேரால் வழங்கப் பெறுவனவாய் முந்நூற்றறுபது புண்ணிய தீர்த்தங்கள் உள்ளனவாம்: அவற்றுள் திக்குப் பாலகர் எழுவர்பேரால் அவரவர் திக்கில் ஏழு தீர்த்தங்களும், ஈசான திக்கில் அசுவினி தேவர்களால் அசுவினி தீர்த்தமும், இன்னும் கட்க தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம், வசிட்ட தீர்த்தம், திரு நதி, சோண நதி, புண்ணிய நதி, சேயாறு, சக்கர தீர்த்தம் முதலியனவும், உருத்திரகணிகையர் எழுவர் செய்த பல தடாகங்களும், திருக்கோயிலினுள்ளே பிரம்ம தீர்த்தம், சிவகங்கை என்னும் முக்கிய தீர்த்தங்களும் அடங்குவனவாம். இங்கே உண்மை நோக்குடைய ஞானிகளுக்கு நீர் நிலேகளெல்லாம் சிவதீர்த்தங்களாம்.

கைலேயில் சுவாமியைத் திருக்கண் புதைத்த பார்வதி தேவியார் ஸ்ரீ காஞ்சிபுரத்தில் வந்து சிவபூஜை செய்து, சிவ பெருமானது இடப்பாகம் பெற்றது இத்திருவண்ணுமலேயி லாம். இத்திருவண்ணுமலேயை நினைத்தும், தரிசித்தும், வலம் வந்தும், பூஜித்தும், அங்கு வசித்தும், ஸ்நானஞ் செய்தும், தவமிருந்தும், பணிசெய்தும் பேறு பெற்றோர்கள் - பார்வதி, கணேசர், ஸ்கந்தர், விஷ்ணு, பிரம்மா, இலக்குமி, ஸரஸ் வதி, இந்திரன், திக்குப் பாலகர், வசுக்கள், இருடிகள், முனிவர்கள், ஸூரியன், சந்திரன், வச்சிராங்கத பாண்டி யன், பிரதத்தன், வல்லாளன், குதிரை, நாவி, விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, புல் பூண்டு முதலிய பல ராவர். தேவர்களும் பிறப்பதுண்டெனில், அப்பிறவி புல் லாயினும் இத்திருவண்ணுமலேப் பூமியிற் பிறக்க இச்சிப் பார்களெனில் இதன் பெருமை சொல்லவற்றே! இத்திரு வண்ணுமலேக் காற்று வீசும் எத்தனையோ காத தூரம் வரையில் அக்காற்றுப் பரிசிக்கப் பெற்றவர்களுக்குச் சிவ ஞானம் எளிதிற் கைகூடுமென்று பெரியோர்கள் சொல் வார்கள்; சாஸ்திரங்களும் முறையிடுகின்றன.

இத்திருவண்ணுமலேயை வலம் வருவோர் ஸகல பாவங் களினின்றும் நீங்கி மனோரத ஸித்திகளெல்லாம் பெற்று முடிவில் முத்தி யின்பமும் பெறுவார்கள். சரியாவான்கள் ஸகள ஜோதிலிங்கமாகக் கண்டும், கிரியாவான்கள் ஸகள நிஷ்கள ஜோதிலிங்கமாகக் கண்டும், யோகிகள் நிஷ்கள ஜோதிலிங்கமாகக் கண்டு யோக ஸமாதியிற் றூங்காமற் றூங்கிக்கொண்டும், ஞானிகள் அகண்ட விலாஸ சுத்த சத் திய ஞானனந்த ஜோதிலிங்கமாகக் கண்டு ஞான ஸமாதி யிற் றூங்காமற் றூங்கிக்கொண்டும் திருவண்ணுமலே என் னும் இந்த ஞான கிரியைப் பிரதக்ஷிணஞ் செய்வார்கள். ஏனைய லோகர்களும் தத்தமக் குரியவாறு கண்டு பிரதக்ஷி ணஞ் செய்வார்கள். இங்கே திருமலேயை அறியாதே வலம் வந்தும், அதன் விசேடத்தால் நாவியுங் குதிரையும் காந்தி

சாலி கலாதரன் என்னும் வித்தியாதரராயின. அறிந்து வலம் வந்து ஒப்பிலா நாயகியாராகிய அம்மையாரும் இடப் பாகம் பெற்றனர்.

இங்கே வருஷந்தோறும் கார்த்திகை மாதம் கிருத்திகை நக்ஷத்திரத்தில் அண்ணுமலையார் மலைமேல் விளக்காய் ஜோதிதரிசனங் காட்டியருளும் அகண்டதீப மஹோத்ஸவம் நிகழும். இவ் வகண்டதீப மஹோத்ஸவ தரிசனத்தால் வருஷ முழுவதும் ஜோதிதரிசனஞ் செய்த பலன் கிடைக்கு மென்று பிரம்மவிஷ்ணுக்களுக்கு ஆதியில் அண்ணுமலையார் ஆஞ்ஞை செய்தருளினர்.

தீப தரிசனஞ் செய்தவர் அஞ்ஞான விருள் விலகி ஞான வொளி பெற்று இஷ்ட ஸித்திகளெல்லாம் பெறு வார். ஆகாச வாசிகளாகிய ஸுரர்களும் நரர்களாய் வந்து பக்தர்களோடு நெருங்கி நின்று தீபதரிசனஞ் செய்வார்கள். வேதங்கள் துதித்த அதூம மகா பரஞ்சோதியே நமது திரு வண்ணுமலை அகண்ட தீபமாம்.

இத்திருவண்ணுமலையின் மகிமை வாக்கு மனங்களைக் கடந்து அனந்தானந்தமாம். ஸகல வேத வேதாந்த ஸித்தாந் தப் பிரதிபாத்திய அதூமக சுத்த கைவல்லிய பரிபூரண ஞானனந்த ஜோதி பர்வதம் நமது திருவண்ணுமலையெனின், இதன் மகிமை சொல்லவல்லார் அறியவல்லார் யார் தாம் இவ்வுலகத்து ?

இத்துணை மகிமையை உட்கொண்டன்றே நமது பரமா சாரிய குலதெய்வமாகிய திருஞானசம்பந்த வள்ளலார், தமது அருந்தமிழ் வேதத்திற் பொருந்தும் மருந்தனைய ஒவ் வொரு திவ்விய மந்திரத்தாலும் அம்மந்திரத் துட்பொரு ளாகக் கொண்டு நமது திருவண்ணுமலை யென்னும் ஞான பர்வத ஜோதிலிங்கத்தைத் துதி ரூபத்தில் வைத்து உப தேசித்தருளியதென்க.

இத்தகைய திருவண்ணுமலை ஆலயத்தில் அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகம் நடந்து நெடுநாளாயின; ஆதலால் இப்போது ஆலய ஜீர்ணோத்தாரணஞ் செய்து ஸ்ரீ அண்ணுமலையார் உண்ணுமுலையம்மையார் இருவருக்கும், ஸ்கந்த கணேசர்களுக்கும், பரிவார தேவதைகளுக்கும் அஷ்டபந்தனஞ்செய்து தாரணவூ வைகாசிமீ 22உ பாநு வாரம் பூர்வபக்ஷம் திரயோதசி திதி சுவாதி நக்ஷத்திரம் உதயாதி நாழிகை $12\frac{1}{2}$-க்குமேல் $16\frac{1}{4}$-நாழிகை யளவில் ஸிம்ஹ லக்கினத்தில் மஹாசாந்திரூப **மஹாகும்பாபிஷேகமும்,** அன்றிரவு பஞ்சமூர்த்திகளும் திருவீதியில் திருவுலாக் கொண்டருளும் மஹா மங்கள மஹா வைபவ மஹா ரிஷபப் பவனி மஹோத்ஸவமும் நிகழுமாதலால், வைதிக சைவ வைஷ்ணவ ஆஸ்திகர்களாகிய ஸகல வர்ணுச்ரம சிவநேசச் செல்வர்க ளெல்லோரும் வந்து தரிசித்து ஸ்ரீ அபீதகுசாம்பா ஸமேத அருணுசலேசுவரரது அற்புத திவ்வியப் பிரஸாதம் எய்தி இகபரமோக்ஷ லாபம் பெற்று இன்புற்று இனிதுவாழும்படி வேண்டிக்கொள்கின்ருேம்.

கும்பாபிஷேகநாள்

வேண்பா

தாரணவை காசிமதி சாருமிரு பத்திரண்டில்
வாரங் கதிரில் வளர்பிறையிற்—சேரத்
திரயோ தசிசோதி சிம்ம மருணேப்
பரமன்கும் பாபிடே கம்.

கலித்துறை

விளக்கும் புகழுடை யண்ணு மலையப்பர் வாமமுற
வளக்கப் படாவரு ளுண்ணு முலையுமை யம்மைபங்கர்
துளக்கறு மாலய கும்பாபி டேகஞ்செய் துங்கரறம்
வளர்க்குந்தென் பாண்டிநன் ஞட்டு நகரத்து வைசியரே.

## கும்பாபிஷேகம் நடைபெறு முறை

தாரண வருஷம் வைகாசி மாதம் 13-ஆம் தேதி சுக்கிர வாரம் பஞ்சமி திதி புநர்வசு நக்ஷத்திரம் ஸித்தயோகங் கூடிய சுபதினத்தில் உதயாதி 16-நாழிகைக்குமேல் ஸிம்ஹ லக்கினத்தில் தனபூஜை, அநுஜ்ஞை, 26¼-நாழிகைக்குமேல் விக்கினேசுவர பூஜை.

14உ ஸ்திரவாரம் - பிரவேச பலி, ரக்ஷோக்ந ஹோமம்

15உ பாநுவாரம் - வாஸ்து சாந்தி

16உ ஸோமவாரம் - ம்ருத் ஸங்கிரஹணம்

17உ பௌமவாரம் - அங்குரார்ப்பணம்

18உ ஸௌம்யவாரம் - ஆசார்ய ரக்ஷாபந்தநம், உதயாதி 38½ - நாழிகைக்குமேல் மகர லக்கினத்தில் கடஸ்தாபநம், யாகபூஜை

19உ குருவாரம் - காலை மாலை யாகபூஜை

20உ சுக்கிரவாரம் - காலை மாலை யாகபூஜை

21உ ஸ்திரவாரம் - காலை மாலை யாகபூஜை

22உ பாநுவாரம் திரயோதசி திதி சுவாதி நக்ஷத்திரம் ஸித்தயோகம் கூடிய சுபதினத்தில் உதயாதி 12½-நாழிகைக்குமேல் 16¼-நாழிகை யளவில் ஸிம்ஹலக்கினத்தில் **மஹா கும்பாபிஷேகம்**, மாலை மஹாபிஷேகம், இரவு பஞ்சமூர்த்திகள் உத்ஸவம்.

இங்ஙனம்

**நாட்டுக்கோட்டை நகரத்தார்**



